# முன்னுரை

ஜோதிர் மயமான அருணாசலச் சாரலில் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமாக, எப்பொழுதும் பிரஸன்னமாக விளங்குகின்றார் பகவான் ஸ்ரீ ரமணமஹர்ஷிகள். கற்போர் மனதைக்கவரும் அவர் சரித்திர வரலாறு தோன்றச் சுருக்கமாக, எளிய நடையில் தெளிவாக, சிறுவர்களுக்காகவே அன்பரொருவரால் எழுதப் பட்டது இச் சிறு நூல். இது தியான வடிவில் அமைந்திருப்பதால் தினந்தோறும் காலை மாலைகளில் பக்தியோடுபடித்துப் பாராயணஞ்செய்பவர் அப்பகவான் திருவருளால் எல்லா நலங்களும் இனிது பெறுவர். கள்ளங் கபடமற்ற இளஞ் சிறுவர்களின் பளிங்குபோன்ற உள்ளங்

களில் பதிக்கும் இத்தகைய பக்தி விதை களே பரிபாக காலத்தில் பராபக்தியா கப் பழுப்பனவாம்.

இந்நூல், பள்ளியில் பயிலும் பாலர் களிடைப் பரவிப் பெரும்பய னளிப்ப தாக!



## பகவான் ஸ்ரீ ரமணமஹரிஷிகள்.

என்னைக்கொடுத்ததும் உன்னைக்கொடுத்
[தனை

எனதியா னென்பதினியேன்

என்னுயிர்க்காதலா உன்னிளம் புன்ன
[கையி

லின்னுயிர் குளிர்ந்துவந்தேன்

பொன்னை நெருப்பினிற் பொலிவேற
[வாட்டிடும்

பொற்கொல்லன்போற் சீவனைப்

புவிமாயை தன்னிலே வாட்டி மாற்றே
[ற்றியுன்

பூங்கழற் கனியாக்கினை

உன்னை விட்டாலெனக் குடலுமில்லை
[உயிருமில்லை

உறவுமில்லை உலகுமில்லை

ஒன்றுமில்லை பலவுமில்லை ஒளிர் அருட்
[சக்தியா

லொன்று பலவான பொருளே

அன்னையடி விளையாடு மருமைக் குழந்தை
[போ

லடிமலரில் விளையாடவே.

அங்கிங்கெனாதபடி எங்குமென்னின்பமா
யானந்தமான சிவமே.

(சுவாமி சுத்தானந்த பாரதியார்)



நோக்கிச் சென்ற ஹே! அருணசல ரமண! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

4. அருணை நகரை அடைந்து, பால சன்னியாசிக் கோலம் பூண்டு, மௌன விரதம் ஏற்று, கோவிலில் பாதாள லிங்கம் என்ற இருட்டுக் குகையில் தனிமையாக அமர்ந்து, கரைதுடலை எறும்பு, பூச்சி முதலிய ஜீவராசிகளுக்கு இரையாக அளித்து, சரீரம் ரணமாயிருந்ததையும் அறியாமல், நீண்ட காலம் யோகத்தில் வீற்றிருந்த ஹே! யோக ரமண! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

5 துஷ்டர்களின் ஹிம்சையால் யோகத்தடை ஏற்படுமென்று அடிக்கடி இடம் மாறி, சுப்பிரமணியர் கோவில், பூந்தோட்டம், வாஹன மண்டபம், மங்கைப் பிள்ளையார் கோவில், குரு மூர்த்தம்

கட்டுப்பாடாக வஸ்து ஒன்றென்று, இளமையிலேயே அதிதமான முடிவுக்கு வந்த, ஹே! முக்த ரமணா! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

3 கண்களை மூடிக் தியானத்திலமர்ந்திருக்கும் போது, 'இப்படிப்பட்டவனுக்கு இதெல்லாம் எதற்'கென்று கோபத்துடன் தமயன் நாகஸாமி சொன்னதை தெய்வ ஆஜ்ஞையாக ஏற்று, அருணாசலத்தின் நினைவுற்று, பள்ளிக்குச் செலுத்தவேண்டிய தொகையில் மூன்று (ரூ. 3) ரூபாயை எடுத்துக்கொண்டு, தகப்பனைரைத் தேடிப் புறப்பட்டுவிட்டதாகவும், நல்ல காரியத்தில் தான் பிரவேசித்திருப்பதில் யாரும் விசனப்படவும், தேடவும் வேண்டா மென்பதாகவும் எழுதி வைத்து விட்டு, திருவண்ணாமலை

நோக்கிச் சென்ற ஹே ! அருணாசல ரமணா ! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

4. அருணை நகரை அடைந்து, பால சன்னியாசிக் கோலம் பூண்டு, மௌன விரதம் ஏற்று, கோவிலில் பாதாள லிங்கம் என்ற இருட்டுக் குகையில் தனிமையாக அமர்ந்து, தவளை, எறும்பு, பூச்சி முதலிய ஜீவராசிகளுக்கு இரையாக அளித்து, சரீரம் ரணமாயிருந்ததையும் அறியாமல், நீண்ட காலம் யோகத்தில் வீற்றிருந்த ஹே ! யோக ரமணா ! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

5. துஷ்டர்களின் ஹிம்சையால் யோகத்தடை ஏற்படுமென்று அடிக்கடி இடம் மாறி, சுப்பிரமணியர் கோவில், பூந்தோட்டம், வாஹன மண்டபம், மங்கைப் பிள்ளையார் கோவில், குரு மூர்த்தம்

கட்டுப்பாடாக வஸ்து ஒன்றென்று, இள மையிலேயே அதிகமான முடிவுக்கு வந்த, ஹே! முக்த ரமணா! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

3 கண்களை மூடிக் தியானத்தி லமர்ந்திருக்கும் போது, 'இப்படிப்பட்ட வனுக்கு இதெல்லாம் எதற்'கென்று கோபத்துடன் தமயன் நாகஸாமி சொன் னதை தெய்வ ஆஜ்ஞையாக ஏற்று, அரு ணாசலத்தின் நினைவுற்று, பள்ளிக்குச் செலுத்தவேண்டிய தொகையில் மூன்று (ரூ. 3) ரூபாயை எடுத்துக்கொண்டு, தகப்பனாரைத் தேடிப் புறப்பட்டுவிட் டதாகவும், நல்ல காரியத்தில் தான் பிர வேசித்திருப்பதில் யாரும் விசனப்பட வும், தேடவும் வேண்டாமென்பதாகவும் எழுதி வைத்து விட்டு, திருவண்ணாமலை

7. விருபாக்ஷி குகையிலமர்ந்து, நெடுநாள் தவம் செய்து, சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போல் பக்திரஸம் ததும்பும் 'அக்ஷர மணமாலை' என்ற மனமுருகும் அருணாசல ஸ்துதியைப் பாடி அளித்து, கூட்டமாக வரும் பக்தர்களை ஆதரித்து, சந்தேகம் கேட்கும் சீடர்களுக்குப் பதில் எழுதிக் கொடுத்து, பல நூல்கள் ஏற்படுவதற்குக் காரணமாயிருந்து, உபதேசங்களை அளித்த ஹே! அருள் ரமணா! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

8 யாவர் வினவினபோதிலும், 'நான் யார்?' என்ற மந்திரத்தையே ஓதி, 'நான், நான்' என்பது எங்கிருந்து புறப்படுகின்றதென்று கவனித்தால் அது அங்கே லயமாகும்; அம்முறையே

'தபஸ்' என்றும், ஒரு மந்திரத்தை மானஸிகமாக ஜபம் பண்ணி அந்த மந்திர த்வனி எங்கிருந்து புறப்படுகின்றதென்று கவனித்தால் அது அங்கே லீனமாகும்; அம் முறைதான் 'தபஸ்' என்றும் அருள் வாக்குகளை அளித்த ஹே! ஆத்ம ரமணா! ஹே! ஞான ரமணா! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

9 புகழடைந்த கவியும், வேதாந்தியும், மஹா பண்டிதருமான காவ்ய கண்ட கணபதி முனிவர் ஞானமடைய வேண்டிச் சரண்புகுதலும், அவரைத் தனது அருள் பெருகும் தாமரைக் கண்களால் கடாக்ஷித்து, மௌனத்தை விடுத்து, அரிய உபதேச மொழிகளைக் கூறி, ஐயங்களைக் களைந்து, நீண்ட காலமாகத் தேடி வந்தவர்க்குப் புகலிடமா

யிருந்து அவரைச் சீடராக ஏற்ற ஹேற ! பரமகுரு ரமணு! உன்னை நமஸ்கரிக் கின்றேன்.

10. துறவியாயினும், அன்னை அழகம்மையிடம் கருணைகொண்டு ஆச்ரமத்தில் இருக்க அனுமதி யளித்து, ஞான மார்க்கத்தில் பக்குவப்படுத்தி, சமாதி நிலைக்குத் தயாராக்கி, ஆவி முடிவுறும் நாள் முழுதும் பக்கத்திலே யமர்ந்து, பிராணனெடுங்கும் சமயம் மார்பில் கரத்தை வைத்து, ஆத்மாவைப் பூதவுடலிலிருந்து அகற்றி, மீளாப் பதவியடைந்த அன்னையின் ஆனந்தத்தில் மூழ்கிய ஹேற! மோக்ஷ ரமணு! உன்னை நமஸ்கரிக்கின் றேன்.

11. மலையிலுள்ள ஸ்கந்தாச்ரமத்திலிருந்து. அடிக்கடி அன்னையின் சமாதிக்

குப் போய்க்கொண்டிருந்து, ஒரு நாள் அவ்விடமே தங்கி, ஆண்டவன் அருள் இதுதான் என்று சொல்லியபடி இப் போதிருக்கும் ஆச்ரமம் ஸ்தாபிதமாக ஆங்கே ஸ்திரமாக வசித்து, பல உபதே சங்களையும், புகழையும் நாடெங்கும் பரப் பிய ஹே ! கீர்த்தி ரமண ! உன்னை நமஸ் கரிக்கின்றேன்.

12 ஆச்ரமத்தில் திருடர்கள் நுழைந்து அட்டஹாசம் செய்யும்பொ ழுது, "இவ்விடம் என்ன இருக்கிறது, வேண்டுமானல் எதையும் எடுத்துப் போக லாம்" என்று மிகவும் சாந்தமாய்ச் சொல்லி, பிறகு தான் திருடர்களால் காலில் அடிக்கப்பட்ட பொழுதுங்கூட, 'வேண்டுமானுல் மற்றொரு காலிலும் அடி யுங்கள்' என, அன்று இயேசுவள்ளல்

சொன்னபடியே சொல்லிய ஹே! சாந்த ரமணா! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

13. பசு, பூனை, நாய், குரங்கு, அணில் போன்ற சகல ஜீவராசிகளையும் மனிதர் போலவே பாவித்து, அவைகளுக்கு வேண்டிய உணவை அளித்து, மிகவும் பிரியத்துடன் நடத்தி, அவைகளை ஹிம்சித்தவர்களுக்கு "அவைகளையும் மனிதர்களைப் போலவே பிரியமாக நடத்தவேண்டு" மென உபதேச மொழிகளை ஊட்டிய ஹே! காருண்ய ரமணா! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

14. இந்தியர்களைப்போலவே, சாட்விக், ப்ரண்டன் முதலிய அநேக மேல் நாட்டார்களையும் தன் ஞானச் சுடரினால் கவர்ச்சி செய்து, ஜாதி, மத பேதமில்லாமல்

பரப்ரம்ம தத்துவத்தைக் கடாக்ஷித்து வரும் ஹே! ஜோதி ரமணு! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

15. எல்லாவற்றிற்கும் அதீதமான பரமாத்ம சொரூபத்தை அபரோக்ஷமாக அறிந்திருந்தும், (அருணசல மஹிமையை விளக்குவதற்காகவே) சரீரப்ரயாசையைச் சற்றும் லக்ஷியஞ் செய்யாது, திரளான பக்தர் கூழாத்துடன் சூழ்ந்து, அடிக்கடி கிரி வலம் வந்து இம்மஹா புனிதமான ப்ரதக்ஷிணத்தின் மகத்துவத்தை தானே செய்கையால் விளக்கிய ஹே! ஸ்ரீ ரமணு! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

16. மௌனமே உருவாய வதரித்து, தேடி அலைந்தவர்களின் மனக் கிலேசத்தைப் போக்கி, பேசாமற் பேசி, அவரவர்

களின் சந்தேகங்களை நிவிருத்தி செய்து, மனதுக்கு அளவற்ற சாந்தியையளித்து ஆத்மானந்த போதையை ஊட்டி, 'உண்மை சொரூபத்தை யறிந்தவன் பிறப்பிறப்பில்லா நித்தியானந்தத்தை அடைகிறான்' என்று உபதேசித்து, ஆயிரம் நாவுள்ள ஆதிசேஷனாலும் வர்ணிக்க முடியாத ஞானக் கிரணங்களால் உலகத்தைப் பிரகாசிக்கச் செய்வித்து, பக்தகோடிகள் சூழ, அயோத்தி, பிருந்தாவனம் போன்ற அருணசல ஆச்ரமத்தில் ஸகஜ சமாதியில் அமர்ந்திருக்கும் ஹே! ஆனந்த ரமண! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

ஓம் ஸ்ரீ ரமண பரமாத்மனே நம:

# பிரார்த்தனை

தெய்வீகமே குன்ற, நாகரீகப் பேய் தலைவிரித்தாடும் இக் காலத்தில் சாதுக்கள் ரக்ஷணார்த்தம் உலகத்தை உய்விக்க, பாபாத்மாக்களேயும் கரையேற்ற, அழகு சுந்தர புத்திரனாகத் திருச்சுழி க்ஷேத்திரத்தில் அவதரித்துக் காரண ரூபமாய் விளங்கும் ஹே! ஸ்ரீ ரமண பரந்தாமா! நான் அறியாமற் செய்த தோஷங்களை க்ஷமித்து, அலைபோல் அடிக்கடி ஜனிக்கும் என் மனச் சேஷ்டையை அடக்கி இம்மை மறுமைகளில் என் ஜீவிய நாளை சுகப்படுத்தி, முக்தி யெனும் மோக்ஷ சாம்ராஜ்யம் அளிக்கவும், ஹே! திரு வேங்கட ரமணா! நான் உன்னை அனு

தினமும் மனதாரத் துதிக்கவும், எனக்கு அனுக்கிரகம் செய்ய வேண்டி என் ஹ்ருதய பூர்வமாய் உன்பாத கமலங்களை நமஸ்கரிக்கின்றேன். ஹே! ரமண சற்குருவே! என் மனதில் எப்பொழுதும் குடிகொண்டிருக்கப் பிரார்த்திக்கின்றேன். எனக்கு மங்களமுண்டாகுக.

ஓம் ஸ்ரீ ரமண பரமாத்மனே நம:

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

oooOOooo